# மகாவாக்கியம்

மகாவாக்கியங்களாவன “பிரக்ஞானம் பிரஹ்மம்” “அஹம் பிரஹ்மாஸ்மி” “தத்துவமசி” “அயமாத்மாப் பிரஹ்மம்” என்பவனவாம். இவை முறையே இருக்கு வேதத்து ஐதரேயாரண்யகோபநிஷத்திலும், யசுர்வேதத்து பிரகதாரண்ணியகோப நிஷத்திலும், சாமவேதத்துச் சாந்தோக்கியோபநிஷத்திலும், அதர்வண வேதத்து மாண்டூக்கியோபநிஷத்திலும், கொண்டாடப்படுவனவாம். வேதாந்தத்தில் ஆன்மாக்களின் பந்த முத்திகளை விளக்கவந்த இந்நான்கு வாக்கியங்களும், வேதாந்ததாத்திற் கூறப்படும் சித்தாந்த மகாவாக்கியத்தின் பொருளினையே விளக்கவெழுந்தனவாம். என்னை? வேதாந்தம் வேதாந்ததரத்தினுக்குச் சோபானமாகலின் என்க. ஈண்டு வேதாந்த மென்பது யோகப்பெயராற்கூறும் வேதத்தின் முடிவாகிய உபநிடதங்களை; உரூடப்பெயராற்கூறும் வியாச சூத்திரத்தினையன்று.

## பிரக்ஞானம் பிரஹ்மம்.

இ - ள். பிரக்ஞானம் - பெரிய ஞானமே சொரூபமாயுள்ளது, பிரஹ்மம் - பராபரவஸ்துவாகிய பரமான்மா. எ - று. பெரிய ஞான முடையது பரமான்மாவெனவே சிறிய ஞானமுடையது ஜீவான்மா வென்பது சொல்லாமே யமையும், பிரக்ஞானமாவதுசத்தி. “ சத்தியின் வடிவே தென்னிற்றடையிலா ஞானமாகும்” எனுந் திராவிடோபநிடதம். இச்சத்தியையுடையவன் சத் தன். ஆகவே சத்திகுணமும் சத்தன் குணியுமாம்; கதிரும் கதிரோனும் போலும், இங்கனமாயின் வேதம் பரமான்வை “ நிர்க்குணன்'குணாதீதன். என்ற தென்னை யெனின் அது பிர கிருதியாற்பட்ட இராஜச தாமத சாத்து விகங்களுடன் கூடிய சகுணபிரமம் போன்ற தன்றென்பதே தாற்பரியம். பரமான்மா எண்குண முடையனாதலை “ கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் - றாளை வணங்காத்தலை" என உத்தர வேத மும், " எட்டுவான் குணத்தீசனெம்மான் றனை" எனத் தேவார மும்," இறையனை மறையவனை யெண்குணத்தினானை" எனத் திருப்பாட்டும்,“ தாணு வெண்குணன் சங்கரன்'எனப்பிங்கல நிகண்டும் கூறியவாற்றா லறிக. எண்குணங்களாவன சருவஞ்ஞத்துவம், திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரம், அலுப்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேகம் என்பனவாம் இவையே பரமான்மாவின் சிற்குணங்களாம். இவையும் பரமான்மாவிற்கு வேண்டியதில்லை யென்பாராயின் அப் பரமான்மா ஓரியல்பு மில்லா வெறும் பாழாய் முடியுமென்க. மேற்குறித்த சிறிய ஞானமாகிய அஞ்ஞானத்தையுடைய ஜீவான்மா.வின் சத்தியாகிய அறிவைச் சுருக்குகின்ற ஆணவமலமும், அந்த அறிவைக் கன்மமல வழியே சிற்றறிவாச் செய்து நிற்கின்ற மாயா மலமுமுண்டென்பதும் பெறப்படும். இம்மூன்றும் பாசமாம். ஆகவே இம்மகா வாக்கியத்தில் பதிபசுபாச மூன்றும் வந்தமை காண்க.

## அஹம் பிரஹ்மாஸ்மி.

இ - ள். அஹம் - நான், பிரஹ்மாஸ்மி - பிரமமாகின்றேன். எ - று. இது பெத்தநிலையில் பரமான்மா ஜீவான்மாவாய் நின்ற முறைமைபோல, ஜீவான்மா யானெனதெனுஞ் செருக்கறுக்கப் பரமான்வாய்திற்கும் ஜீவன் முத்தநிலையைக் குறிக்கின்றது. எங்ஙனமெனின், பரமான்மா பெத்தநிலையில் உடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மா வேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின்வழி நின்ற முறைமைபோல, ஈண்டான்மா அப்பா மான்வினுடனாய் நின்றறியினும் தானென வேறு காணப்படாதவாறு பரமான்மாவோடொற்றுமைப்பட்டு அவ்விறை பணியின் வழுவாது நிற்கப் பெறின், அங்கன மேகனாகி நிற்றலால் பா னென் தென்னும் செருக்கொழியு மென்க. ஒற்றுமைப்பட்ட பின்னர் இறைபணியினிற்பது பந்தமாகாதோ எனின், ஆகாது;

"நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமுமரனுடடை - யாமென்னி
லெத்தனுவினின்று மிறைபணியார்க் கில்லை வினை
- முற்செய் வினையுந் தருவான் முன்" எனப் பகவான் மெய்கண்டாரருளிய பரப்பிரம சூத்திரத்தில் இதைக் காண்க. "சிவமாக்கியெனையாண்ட" எனவும், "சிவடேநானெனத்தேறினன் காண்க" எனவும், "சிவமானவாபாடித்தெள்ளேணங் கொட்டாமோ" எனவும் வரும் தெய்வத் திருவாசகத் திருவாக்குகளும் இம்மகாவாக்கியத்தின் கருத்தேயாம். இவனவனாகவே பாசமுமில்லை யாயிற்று. ஆகவே இம்மகா வாக்கியத்தில் பதி பசு பாச மூன்றும் வந்தமை காண்க.

## தத்துவமசி.

இ - ள். சத் - (பரமான்மா வெனப்படும்) அது, துவம் (ஜீவான்மா வெனப்படும்) நீ, அசி - ஆயினை, எ - று. இது பாமான்மாவும் ஜீவான்மாவும் அனாதி யத்து வித சம்பந்தியா : பிருத்கலை யுணர்த்துகின்றது. எங்கனமெனின், தூலவொளியாகிய கண்ணொளியுஞ் சூக்குமவொளியாகிய விளக்கொளியும் அத்து விதமாய்க் கலந்து நிற்கும் நிலை உற்றுநோக்க வல்லார்க்குப்பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக் காணுங்காற் காணுந் தன்மையே முனைத்துக் கோன்று மாகலின், அவ்வழி விளக்கொளி இருந்தும் இல்லை. அன்றி விளக்கொளியாக் கானுங் சாற் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்று மாகலின், அவ்வழிக் கண்ணொளி யிருந்தும் இல்லை. இனிக் கண்ணொளியும் விளக்கொளியு மெனப்பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளியைத் திரிவு புலனாக் காட்சிப் படுவதல்லது தெளிவு புலனாக் காட்சிப் படுமாறில்லை. அதுபோலத் தூலவறிவாகிய ஆன்மாவும் சூக்கும் அறிவாகியபரமான்மாவும் அத்துவிதமாய்க்கலந்து பிரித்தறிய வாராவென்க. இங்கனம் சீவான்மா தாணுவினோடத் துவிதமாவதற்கு முந்தி ஆணவத்தோடு அத்து விதமாக விருந்த உண்மை வெளியாம். ஆகவே இம்மகா வாக்கியத்தில் பதி பசு பாச மூன்றும் வந்தமை காண்க.

## அயமாத்மா பிரஹ்மம்.

இ - ள். அயம் - அந்த, ஆத்மா - பரமாத்துமாவே, பிரஹ்மம், முன் சொன்ன பிரமமாம். சிவனுக்கும் சீவனுக்கும் ஆன்மா என்ற சொல் பொதுமையி னிற்றலானும், இரண்டும் சித்தாக விருத்தலினாலும், சீவான்மாவைப் பிரமமென மயங்காதபடி, முன் மகாவாக்கியத்திற் குறித்த 'தத்' என்னுஞ் சப்தத்தை " அய" வென்னுஞ் சொல்லாற் சுட்டிப் பரமான்மாவே பிரமமெனச் சாதிக்க வெழுந்தது இம்மகாவாக்கியம். இருவகை யான்மாவிற்கும் வேற்றுமைதா னென்னையோ வெனின் கூறுதும் : பரமான்மா அருட்சித்து, சீவான்மா அருளைச் சேருஞ் சித்து; பரமான்மா பவத்தினைக் கெடுத்துப் புத்தி முத்தி யளிக்குஞ்சித்து, சீவான்மா அவைகளி லழுந்துஞ்சித்து; பரமான்மா தானேயறியுஞ்சித்து, சீவான்மா அறிவிக்க அறியுஞ்சித்தாம். இவ்வாக்கியத்தில் சீவான்மா அறியப்பட்ட வழியே அதன் பாசமு மறியக்கிடக்கின்றது. ஆகவே இம்மகாவாக்கியத்தில் பதி பசு பாசம் மூன்றும் வந்தமை காண்க.

வேதாந்தத்திலுள்ள இந்நான்கு மகாவாக்கியங்களும் அனுபவிக்கும் பொருள் ஆன்மாவும், அனுபவப் பொருள் பரமான் மாவு மென்பதை நன்கு விளக்கின.

சுபம்,.

மணவழகு.

சித்தாந்தம் - 1912 ஷு - மார்ச் மீ